Nov - Dec 2017



துதியின் கூடாரத்தில் இருந்து

# அக்கினிக்குஞ்சு



நீ வற்றாத நீரூற்றைப்
போலவும், நீர்ப்பாய்ச்சலான
தோட்டத்தைப்போலவும்
இருப்பாய்.

**போதகரின் மேசையில் இருந்து எழுதுவது என்னவென்றால்...**



போன இரண்டு மாதங்களுக்கிடையே எத்தனை அழிவுகளை இந்தப் பூமிபந்து சிக்கித் தவித்திருக் கின்றது என்பதை நீங்கள் அறிவீர்கள். உலகமய மான வெப்பம், பனிப்பாறைகளின் உருகல்கள், பூமியதிர்ச்சிகள், சுனாமி வெள்ளங்கள், அக்கினிப் பிளம்பு மலைகளின் வெடித்துச் சிதறல்கள், அனு தினமும் தோன்றும் புதிய புதிய நோய்கள். மனுக் குலம் முகம் கொடுக்கும் மன அழுத்தம், இப்படி கடைசிகால அடையாளங்கள் எத்தனையோ. இது பதினோராம் மணி வேளை. உலக இரட்சகர் இயேசு மிகச் சீக்கிரமாய் வரப்போகின்றார். ஒவ்வொரு மனிதனும் தன்னைச் சிரு ஸ்டித்தவரைச் சந்திக்க ஆயத்தப்பட வேண்டிய நேரம். நீங்கள் ஆயத்த மாகவே இருங்கள். எந்த வேளையும் மணவாளன் தன்னுடைய மணவாட் டிக்காக வரப் போகின்றார். விளக்கோடும்,எண்ணெயோடும் தயாராய் இரு ந்த புத்தியுள்ள கன்னிகைகளைப் போல ஆயத்தமாகவே இருங்கள். எத்தனை பேருக்கு கர்த்தரைப் பற்றிச் சொன்னோம், எத்தனை ஆத்துமாக் களை ஆதாயம் பண்ணினோம், எத்தனை சந்தர்ப்பங்களை சாட்சியாக்கிப் பயன்படுத்தினோம் என்பதை ஆராய்ந்து பாருங்கள். உங்கள் நாட்கள் எண்ணப்படுகின்றன. வானத்தில் அவர் சீக்கிரமாய் வரப்போகின்றார். நாட் களைப் பிரயோசனப்படுத்திக் கொள்ளுங்கள். அவனவன் செய்த பலன் அவரோடே கூட வருகின்றது. அவரை எதிர் கொள்ளப்போகின்றவர்கள் யாவரும் பாக்கியவான்கள்- போதகர் மனோ தர்மலிங்கம்.

# துதியின்கூடாரம்

எங்களைப் பற்றிச் சுருக்கமாக.......

கடந்த 26 வருடங்களாக மிசிசாகாவில் கர்த்தருடைய வசனத்தை வல்லமையோடும், விடுதலையோடும் அறிவித்தும், நூற் றுக்கணக்கானவர்களை கர்த்தருக்குள்ளும் நடத்தி வருகின்றோம். சபை யின் இலக்காக நம்முடைய தாய்த்தேசத்திலும், தமிழகத்திலும் தேவை யோடிருக்கின்ற ஊழியர்களைத் பொருளாதாரத்தில் தாங்கியும், சபைக் கட்டிடத்தைக் கட்டியும் கொடுத்தும் வருகின்றோம்.

சங்கீதப் புத்தகத்தை 6 மொழிகளில் சங்கீதமாய் பாடி வெளியிடும் ஊழியத்தில் தமிழ் மொழிச் சங்கீதங்களை செய்து 8 வருடங்களில் செய்து முடித்திருக்கின்றோம். அக்கினிக்குஞ்சு என்னும் இந்த சஞ்சி கையை இருமாதங்களுக்கு ஒருமுறை வெளியிட்டு ஏறக்குறைய 1500 பிரதிகள் மூலமாய் ஊழியம் செய்து வருகின்றோம்.

இலங்கையில் மடுப்பகுதியிலும், தம்பனைக்குளத்திலும், கறுக்காக்குள த்திலும் சபைகளை நிறுவி, ஆதரித்து வருகின்றோம்.

# கிராம ஊழியத்திற்கு மிகஅவசரமான தேவை



# உங்களால் இயன்றவரை உதவிடுங்கள்

இன்னும் கொஞ்சக் காலத்தில் மழைக்காலம் ஆரம்பித்து விடும். நம்முடைய கிராமங்களில் மக்கள் படப்போகும் அவலம் அதிகமாய் இருக்கும். குறிப்பாக பின் தங்கிய மாவட்டமாகிய மன்னாரில் உள்ள மடுப்பகுதியில் எந்த வசதியும் கிடையாது. இங்கே ஊழியத்திற்காகவும், மக்களின் அவசரத்தேவைக்காகவும் ஒரு ஆட்டோ (முச்சக்கர வண்டி) தேவைப்படுகின்றது. தயவு செய்து உங்களால் முடிந்தளவு உதவி செய்வீர் களா?. ஒரு புதிய வண்டியின் விலை இலங்கை ரூபாயில் 7 லட்சங்கள் மாத்திரமே. உங்களின் காணிக்கைகளுக்கு ரசீது அனுப்பி வைக்கப்படும். உங்கள் பிள்ளைகளின் பிறந்தநாள், உங்கள் திருமண நாள் ஆடம்பரச் செலவுகளுக்கு பதிலாக நீங்கள் ஏழைகளுக்கு உதவி செய்யுங்கள். கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பார்.

உங்கள் காணிக்கைகளை **pay to: Mississauga Christian Family Worship centre** என்னும் முகவரிக்கு கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்

**Mississauga Christian Family Worship Centre**
**5155,Spectrum Way, Unit 7**
**Mississauga ON**
**L4W 5A1**



**For further information please call**

**Bro. Sydney Arulanandam 416 662 4193**
**Pastor Mano Tharmalingam 416 554 8448**




பூமியும், அதன் நிறைவும் கர்த்தருடைய என்பதே வேதம் சொல்லும் சாட்சி. நிறைவைத்தந்து, தன் மக்களை ஆசீர்வதிக்கும் தேவாதி தேவன் நீங்களும் நானும் செழித்திருக்க வேண்டும் என்று சித்தம் கொண்டிருக்கின்றார். தேவன் இந்த உலகத்தைப் படைத்த போது தனது சாயலாகப்படைக்கப் போகின்ற மனிதனுக்காக மரம், கனி, கொடி தளிர், சமுத்திரம், நதி, அலைகள் என்று அழகாய் எல்லாவற்றையும் படைத்தார். அதனை ஆளுகை செய்யும் பொறுப்பையும் மனிதனிடத்தே ஒப்படைத்தார். அவரின் படைப்புக்க ளில் பூரணமும், ஆசீர்வாதமும் தங்கியிருந்தது. மனிதன் கொடுக்கும் மனப்பக்குவம் உள்ளவனாகவே படைக்கப்பட்டான். அவனிடத்தில் அளவில்லாத செல்வமும், அதிகார வல்லமையும், ஆளுமையையும் தேவன் கொடுத்தார்.

உங்கள் பொக்கிஷம் எங்கே இருக்கிறதோ அங்கே உங்கள் இருதயமும் இருக் கும் என்று லூக்கா 12:34 சொல்லுகின்றது. நாம் யார் என்பதை நம்முடைய செயல்கள் வெளிப்படுத்தும் என்பதே அதன் மூலவிளக்கம்.

தேவனுடைய எல்லா வாக்குத்தத்தங்களையும் அறிக்கையிடுகின்றவர்கள் தசமபாகம் என்று வரும்போது மாத்திரம் இது நமக்கானதல்ல என்று எதிர்த்து நிற்கின்றார்கள். காரணம் அவர்களின் இருதயம் இருக்க வேண்டிய இடத்தில் இல்லாமல், இருக்கக் கூடாத இடத்தில் இருப்பது தான். தசமபாகத்தின் நோக்கத்தையும், தோற்றத்தையும், ஆசீர்வாதத்தையும் முழுமையாக அறியாதிருப்பவர்களும், ஆண்டவரின் ஊழியத்திற்கு எதிர்த்து நிற்பவர்களுமே கொடுப்பதற்கும், கொடுப்பவர்களுக்கும் எதிர்த்து பரப்புரை செய்து கொண்டிருக்கின்றார்கள். எனது 34 வருட ஊழியத்தில் நான் தசமபாகம் மூலம் பெற்ற அனுபவமும், ஆசீர்வாதமும், என் அறிவுக்கெட்டியவரை ஆசீர்வதிக்கப்பட்டவர்களையும் நினைத்துப் பார்த்தே இந்தச் செய்தியை நான் எழுதுகின்றேன்.

தசமபாகம் என்னும் தேவதிட்டம் புதிய ஏற்பாட்டுக்காலத்திலேயோ அல்லது நியாயப்பிரமாணத்தின் காலத்திலேயோ ஏற்படுத்தப்பட்டதல்ல. நம்முடைய ஆவிக்குரிய தகப்பனாகிய ஆபிரகாமின் காலத்திலே தேவனால் உண்டாக்கப்பட்டது. ஆதியாகமம் 14:20 ல் காணப்படும் மெல்கிதேசேக்கு என்னும் இராஜாவுக்கு ஆபிரகாம் தசமபாகம் கொடுத்தான் என்று எழுதப்பட்டிருக்கின்றது. இந்த மெல்கிதேசேக்கு என்னும் இராஜாவைக் யார் என்று பார்ப்போமானால் இவனுக்கு ஆபிரகாம் எல்லாவற்றிலும் தசமபாகம் கொடுத்தான்ளூ இவனுடைய முதற்பேராகிய மெல்கிசேதேக்கு என்பதற்கு நீதியின் ராஜா

என்றும், பின்பு சாலேமின் ராஜா என்பதற்குச் சமாதானத்தின் ராஜா என்றும் அருத்தமாம் (எபி-7:2) என்று வாசிக்கின்றோம். இந்த மெல்கிதேசேக்கு என்னும் இந்த இராஜா குமாரனாகிய கிறிஸ்துவுக்கு அடைளாளமானவர். கிறிஸ்துவே சமாதானத்தின் ராஜா என்றும், சமாதானத்தின் தேவன் என்றும், சமாதானத்தின் காரணர் என்றும், சமா தானத்தின் கர்த்தர் என்றும் அழைக்கப்படுகின்றார். இந்த ராஜாவுக்கே அவர் தன்னு டைய தசமபாகம் கொடுத்தார்.

தசமபாகம் என்பது பத்தில் ஒன்று என்பதே பொருள். நம்முடைய வருமானத்தில் பத்தில் ஒரு பகுதியை தேவனுடைய ஊழியத்திற்காக கொடுப்பதே தசமபாகம் கொடுப்பது என்று பொருளாகும். தேவனுக்கு கொடுக்கும் இந்த பலியானது தேவனால் தன் மக்கள் ஆசீர் வதிக்கப்பட வேண்டும் என்பதற்காகவே உருவாக்கப்பட்டது. இதனை எதிர்ப்பவர்க ளும் உண்டு, விமர்சிப்பவர்களும் உண்டு.

புதிய ஏற்பாட்டில் தசமபாகம் என்பது கொடுக்க வேண்டுமா என்று கேள்வியெழுப்புவ தற்கு முன் எபிரேயர் 7ம் அதிகாரத்தை வாசிக்க வேண்டும் என்பதே என் வேண்டுகோள். இந்த அதிகாரத்தில் மட்டும் 6 இடத்தில் தசமபாகம் குறித்து வாசிக்க முடியும். ஆகை யால் தேவன் தந்திருக்கும் இந்த ஆசீர்வாதத்தின் ஆழம் அறிந்திருப்போமானால் ஒரு நாளும் நாம் வெற்றுப்பாத்திரங்களாயும், வெறும் வேட்டுக்களாயும் இருந்துவிடமாட் டோம். இனி தசமபாகத்தின் நோக்கத்தையும் ஆசீர்வாதத்தையும் தியானம் செய்வோம்.

1. தசமபாகம் என்பது நாம் தேவனை முற்றிலும் சார்ந்திருக்கின்றோம் என்பதற்கான செயல்.

நம்முடைய வருமானம் முழுவததையும் நமக்காக நாம் வைத்துக் கொள்ளவே விரும்பு வோம். காரணம் நம்முடைய செலவீனங்கள், தேவைகள், எதிர்காலச் சேமிப்புக்கள் போன்றவைகள் நம்முடைய வருமானத்தைக் காட்டிலும் அதிகமாகவே இருக்கின்றது, அது இருக்கும். இதனை எப்படிச் சமாளிப்பது என்று எதிர்காலத்தைக் குறித்துக் கலங்காமல் இருக்க வேண்டுமானால் நாம் எங்கோ ஒரு இடத்தில் முதலீடு செய்ய வேண்டும். கர்த்தருடைய வேதத்தில் மல்கியா என்னும் தீர்க்கதரிசி என்னும் தீர்க்கன் மூலமாய் என் ஆலயத்தில் ஆகாரம் உண்டாயிருக்கும்படித் தசமபாகங்களையெல்லாம் பண்டசாலையிலே கொண்டு வாருங்கள் அப்பொழுது நான் வானத்தின் பலகணிகளைத் திறந்து, இடங்கொள்ளாமற்போகுமட்டும் உங்கள்மேல் ஆசீர்வாதத்தை வருஷிக்க மாட்டேனோவென்று அதினால் என்னைச் சோதித்துப் பாருங்கள் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார் (மல்-3:10)என்று உரைக்கின்றார். வானத்தின் பலகணிகளைத் திறந்து ஆசீர்வதிக்க வேண்டுமானால் அவரை நம்பி நாம் அவரில் சார்ந்திருக்க வேண் டும். இந்தச் சார்ந்திருப்பதலை வெளியரங்கமாக்குவதே நாம் கொடுக்கும் தசமபாகம்.

2. தசமபாகம் என்பது முற்றுமுடிதாக கீழ்ப்படிதல் சம்பந்தப்பட்டது.

எந்த மனிதன் தன்னை முற்றும் முழுதாக தேவனுக்கும், வசனத்திற்கும் கீழப்படிந்திருக் கின்றானோ அவன் தேவகட்டளைக்கு கேள்வி கேட்காமல் கீழப்படிவான். கட்டளைக்கு கீழ்ப்படிந்தவன் என்பதும், கீழ்ப்படியாததும் என்பதும் செயல் சம்பந்தப்பட்டது. வாய்ச் சொல் வீரர்கள் நிறைந்த இந்தக் காலத்தில் செயல்வீரர்களையே தேவன் எதிர்பார்க்கின்

றார். உன் பொருளாலும், உன் எல்லா விளைவின் முதற்பலனாலும் கர்த்தரைக் கனம்பண்ணு. அப்பொழுது உன் களஞ்சியங்கள் பூரணமாய் நிரம்பும், உன் ஆலைகளில் திராட்சரசம் புரண்டோடும் என்று நீதிமொழிகள் 3:9-10 வசனங்கள் கூறுகின்றன. தன் விளைவின் பலனைத் தேவனுக்காக கொண்டு வருவதென்பது கீழ்ப்படிதலின் அடையாளமாகும். கொடுத்தலில் உண்மையில்லாதவர்கள் எதிலுமே உண்மையற்றவர்கள். அவர்கள் சுயநலத்தின் சுதந்திரவாதிகள். இன்றைக்குள்ள சபைகளில் கொடுக்காமல் இருக்கும் விசுவாசிகள் என்றழைக்கிறவர்கள் மற்றவர்கள் மேல் வளர்ந்து நிற்கும் குருவிச்சை செடிக்கு ஒப்பானவர்களே. தேவனுக்குப் பயந்து கொடுங்கள், உங்கள் ஆலைகளில் திராட்சை இரசம் புரண்டோடும். சந்தோஷம் புரண்டோடும்.

3. தசமபாகம் என்பது சாட்சியாக நம்மை நிறுத்துகின்றது.

பழைய ஏற்பாட்டுக் காலத்தில் வருமானத்தில் 10ல் ஒரு பங்கு மாத்திரம் தேவனுடைய ஊழியத்திற்கு கொடுக்கப்படல் வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டது. புதிய ஏற்பாட்டில் தேவன் தன் ஒரேபேறான குமாரனைத் தந்து நம்மை விடுவித்தினால் நமக்குண்டான எல்லாமே தேவனுடையது தான். 10 வீதம் மாத்திரமல்ல, அதற்கு அதிகமாகவே கொடுக்க வேண்டும். சபையில் இருந்து அறிவிக்கத்தக்கவர்களைத் தெரிந்து, அழைப்பையறிந்து, பயிற்றுவித்து, நற்செய்தி அறிவிக்கப்படாத இடங்களுக்கு அனுப்பி வைக்க வேண்டும். சபை கூடுமிடத்திற்கான இடத்திற்கான செலவு, சபையை நாள்தோறும் நடத்துவதற்கான செலவு, சபையை அடுத்த இடத்திற்கு கொண்டு போக வேண்டிய பொருளாதார ஆதரவு எல்லாவற்றையுமே தேவன் தன் மக்களை ஆசீர்வதிப்பதன் மூலமே சந்திக்கின்றார். அப்பொழுது எல்லா ஜாதிகளும் உங்களைப் பாக்கியவான்கள் என்பார்கள், தேசம் விரும்பப்படத்தக்கதாயிருக்கும் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார் என்று மல்கியா 3:12ல் வேதம் சொல்லுகின்றது. தேவனுக்குரியதை தேவனுக்குச் செலுத்த வேண்டும், ராஜாவுக்குரியதை ராஜாவுக்கு செலுத்த வேண்டும்.




உங்கள் தசமபாகத்தை தேவனுடைய வார்த்தையை பெற்றுக் கொள்ளும் சபைக்குத் தான் கொடுக்க வேண்டும். அதுவே தேவனுடைய வார்த்தை நமக்குச் சொல்லும் உபதேசம். தசமபாகம் கொடுக்க மறுப்பவன், தசம பாகத்தைக் கொடுக்காதவன் இருசாராருமே தேவனுடைய பார்வையில் திருடர்களே!. திருடன் தண்டனைக்குரியவனே தவிர, ஆசீர்வதிகப்படத்தக்கவன் அல்ல. ஒருவேளை இந்தச் செய்தி உங்கள் உள்ளத்தைக் குற்றப்படுத்துமானால் உங்கள் தாய்ச் சபைக்கு உங்கள் தசமபாகத்தைத் தவறாமல் கொடுத்து, ஆதாரத் தூண்களாய் மாறுங்கள், தேவனுடைய ஆசீர்வாதம் உங்கள் மேல் தங்கும். தசமபாகம் கொடுக்காமல் இருப்பீர்களானால் உங்கள் வாழ்வைக் கவனித்துப்பாருங்கள். காரணம் எல்லாக் குற்றத்துக்கும் தேவ தண்டனை உண்டு. கீழ்படிவுள்ளவர்களாகி தேவனால் ஆசீர்வதிக்கப்படுங்கள்!

பிசாசானவன் ஆதிமுதற்கொண்டு மனுஷ கொலைபாதகனாயிருக்கிறான்; சத்தியம் அவனிடத்திலில்லாதபடியால் அவன் சத்தியத்திலே நிலைநிற்கவில்லை" ( யோவான் 8 : 4 4 ) என்று இயேசு சொன்னார். இங்கு சாத்தானின் குணாதிசயம் ஒன்று சொல்லப்படுகின்றது. அவனிடத்தில் சத்தியம் இல்லை; அவன் சத்தியத்தில் நிலைநிற்பதில்லை. மேலும் " சாத்தான் பொய்யனும் பொய்க்குப் பிதாவுமாயிருக்கிறபடியால், அவன் பொய் பேசும்போது தன் சொந்தத்தில் எடுத்துப் பேசுகிறான்" என்று இயேசு கூறினார். தேவன் அன்பாயிருக்கிறார்; சாத்தான் பகைக்கிறவனாக இருக்கிறான். நான் சத்தியமாயிருக்கிறேன்; சாத்தான் பொய்யனாய் இருக்கிறான் என்றும் இயேசு கூறினார். பிசாசானவன் சத்தியத்திலே நிலைநிற்பதில்லை, அவனிடத்தில் சத்தியம் இல்லை. அவன் பொய் பேசும்போது, தன்னுடைய சொந்தத்திலிருந்து பேசுகிறான். அவனது சுபாவமே பொய் பேசுவதாகும்; ஏனெனில் அவன் பொய்யனும் பொய்க்குப் பிதாவுமாயிருக்கிறான். எல்லாப் பொய்களும் பொய்யின் பிதாவாகிய சாத்தானிடமிருந்தே பிறக்கின்றன. நீங்கள் சொல்லும் பொய்யானது, சாத்தான் தகப்பனாகவும், நீங்கள் தாயாகவும் இருந்து பிறக்கும் குழந்தையாக இருக்கிறது. அந்நேரத்திலே, பொய் என்னும் ஒரு குழந்தையை நீங்கள் பெற்றெடுப்பதற்காக, உங்களது இருதயத்தையும், நாவையும் சாத்தானுக்கு ஒப்புக் கொடுக்கிறீர்கள். தேவன் ஒருக்காலும் பொய்யைப் பெற்றெடுக்கும் தகப்பனாய் இருப்பதில்லை. ஆகவேதான் நாம் கிறிஸ்தவர்களான பிறகு (விசுவாசிகளான பிறகு), எப்பொழுதுமே உண்மையைத்தான் பேச வேண்டுமென்பதின் முக்கியத்துவத்தை அறிய வேண்டியது மிக அவசியமாகின்றது.

"உள்ளதை உள்ளதென்றும், இல்லாததை இல்லையென்றும் சொல்லுங்கள்; இதற்கு மிஞ்சினது தீமையினால் உண்டாயிருக்கும்" ( மத் 5:37) என்று இயேசு இதைப் பற்றிக் கூறியிருக்கிறார். அத்துடன், " சத்தியம் பண்ண வேண்டாம்; சத்தியமே பண்ண வேண்டாம்" ( மத் 5:34) என்றும் சொல்லியிருக்கிறார். நீங்கள் சத்தியம் செய்ய வேண்டியதில்லை. ஏனெனில், ஒருவன் சத்தியம் செய்யும் போது, அவன் வேதத்தின் மீதோ அல்லது தேவன் மீதோ அல்லது பரத்தின் மீதோ அல்லது இது போன்ற ஏதோ ஒன்றின் மீதோ தனது கைகளை வைத்துத்தான் அதைச் செய்ய வேண்டும். அவன் உள்ளபடியே என்ன சொல்லுகிறான் என்றால், 'நான் பெரும்பாலான நேரம் பொய்தான் சொல்லிக் கொண்டிருக்கிறேன். இப்போது சத்தியம் செய்வதின் மூலம் ஓர் உண்மையைச் சொல்லுகிறேன்' என்று சொல்லுகிறான். ஆனால் இயேசுவோ, "நீங்கள் அப்படி இருக்கலாகாது. நீங்கள் எல்லா நேரமும் உண்மையைத்தான் பேச வேண்டும். நீங்கள் சத்தியம் பண்ண வேண்டிய தேவையே இல்லை" என்று சொல்கின்றார். சத்தியம் செய்து சொல்லப்படும் வார்த்தைகள், சத்தியம் செய்யப்படாமல் சொல்லப்படும் வார்த்தைகளைவிட உண்மையுள்ளவைகளாக இருந்துவிடக் கூடாது. இரண்டும் ஒன்று போலவே இருக்க வேண்டும். இதற்கு மிஞ்சின யாவும் தீமையாய் இருக்கும்.

நாம் தேவனிடத்தில் வரும்போது, அவர் முதலாவது நம்மிடமிருந்து எதிர்பார்ப்பது என்ன? பூரணத்தை அல்ல, பரிசுத்தத்தை அல்ல, நற்கிரியைகளை அல்ல, அன்பை அல்ல,

இவை எதையுமே அவர் நம்மிடமிருந்து முதலில் எதிர்பார்ப்பதில்லை. நாம் அவரிடத்தில் வரும்போது அவர் நம்மிடமிருந்து ஒரேயொரு காரியத்தைத்தான் எதிர்பார்க்கிறார். அது நம்முடைய நேர்மையே.

பரதீசு என்பது பூரணமான மக்களுக்காக உண்டாக்கப்பட்டதல்ல. அது நேர்மையான மக்களுக்காக உண்டாக்கப்பட்டது. உண்மை மாத்திரமே பேச விரும்பும் மக்களுக்காக உண்டாக்கப்பட்டது. வேதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் முதல் பாவம் பொய் பேசுவதாகும். முதன்முதலில் செய்யப்பட்ட பாவத்தைப் பற்றி ஆதியாகமம் 3-ல் சொல்லப்படுகிறது. அது விலக்கப்பட்ட மரத்தின் கனியைப் புசித்ததினால் ஏவாள் செய்த பாவமல்ல. அது ஆதியாகமம் 3-க்கு முன்னதாகவே சாத்தானால் செய்யப்பட்ட பாவமாகும்; அது மனிதனால் செய்யப்பட்டதன்று. சாத்தான் ஏவாளிடத்தில் வந்து, 'இந்த மரத்தின் கனியைப் புசிக்கக் கூடாதென்று தேவன் சொன்னதுண்டோ?' என்று கேட்டான். அதற்கு ஸ்திரீயானவள், 'தோட்டத்தின் நடுவிலுள்ள மரத்தின் கனியைப் புசிக்கும் நாளில் நீ சாகவே சாவாய் என்று தேவன் சொல்லிருக்கிறார்' என்று பதிலளித்தாள். சர்ப்பமானது, "நீ சாகவே சாவதில்லை" என்று ஆதியாகமம் 3:4 -ல் சொல்லிற்று. அது ஒரு பொய்யாகும். அதுதான் வேதத்தில் சொல்லப்பட்டுள்ள முதலாவது பொய்யும், முதலாவது பாவமும் ஆகும். நீ சாவதில்லை; நீ தேவனுக்குக் கீழ்ப்படியாமல் இருந்தாலும், அதற்கான தண்டனை உனக்குக் கிடைக்காது. நீ நரகத்திற்குப் போக மாட்டாய். பாவத்திற்கு எத்தகைய தண்டனையும் இல்லை. இத்தகைய ஒரு பொய்யைக் கொண்டுதான் சாத்தான் ஏவாளை வஞ்சித்தான். அன்று முதல் இன்று வரையிலும், பல்லாயிரம் ஆண்டுகளாய் அவன் மனுக்குலம் முழுவதையும் வஞ்சித்து வருகிறான். பாவிகள் அவர்களது பாவங்களில் இருப்பதைக் கண்டாலும், "நீங்கள் ஆண்டவரை ஏற்றுக் கொண்டு விட்டீர்கள். நீங்கள் எவ்வளவுதான் பாவம் செய்தாலும், பரலோகத்திற்குதான் போவீர்கள்" என்று ஆறுதல் சொல்லும் பிரசங்கிமார்களும் உண்டு.

" துர்க்கிரியைக்குத்தக்க தண்டனை சீக்கிரமாய் நடவாதபடியால், மனுபுத்திரரின் இருதயம் பொல்லாப்பைச் செய்ய அவர்களுக்குள்ளே துணிகரங்கொண்டிருக்கிறது" என்று பிரசங்கி 8:11-ல் சொல்லப்படுகின்றது. தேவன் அவ்வப்போதே பாவத்திற்கான தண்டனையைத் தராதபடியால், மக்கள் தொடர்ந்து பாவத்தில் வாழ்ந்து கொண்டுள்ளனர். ஆதலால், 'நீ தண்டிக்கப்படப் போவதில்லை. உன்னைச் சுற்றியுள்ள மற்ற ஜனங்களையெல்லாம் பார். அவர்கள் செய்யும் பாவங்களையெல்லாம் பார். அநேக கெட்ட காரியங்களைச் செய்தும், எவ்விதத் தண்டனையும் பெறாமல் வாழும் விசுவாசிகளைப் பார்' என்று பிசாசு சொல்லுகிறான். அவர்கள் தண்டனையிலிருந்து தப்பவில்லை. அவரது தண்டனையான, தேவனுடைய நியாயத்தீர்ப்பு இன்னும் வரவில்லை. அவ்வளவுதான். நீ பாவம் செய்தாலும் துன்பப்பட மாட்டாய் என்ற ஒரு பொய்யைக் கையில் வைத்துக் கொண்டு, சாத்தானானவன் எல்லா மக்களையும் முட்டாளாக்கிக் கொண்டு உலகை வலம் வந்து கொண்டிருக்கிறான். "மாம்சத்தின்படி பிழைத்தால் சாவீர்கள்" (ரோமர் 8:13) என வேதம் எச்சரிக்கின்றது. ஆனால் சாத்தானோ, 'இல்லையில்லை, நீ சாவதில்லை. தேவன் இரக்கமுள்ளவர். தேவன் கிருபையுள்ளவர். நீ இயேசுவை உன் வாழ்க்கைக்குள் வருமாறு அழைத்திருக்கிறாய். ஆகவே நீ

மாம்சத்தின்படி பிழைத்தாலும், சாக மாட்டாய்' என்று சொல்லுகிறான். அது ஒரு வஞ்சனை. நீங்கள் மாம்சத்தின்படி பிழைத்தால், சாவீர்கள். இதைக் குறித்துக் கடுகளவேனும் ஐயம் கொள்ள வேண்டாம். சாத்தான் ஒரு பொய்யனாக இருப்பதால், அவன் தனது சுபாவத்தைத் தன்னுடைய பிள்ளைகளுக்குக் கடத்த விரும்புகின்றான். இந்த சுபாவம் ஒரு விசுவாசியை வெகு எளிதாகத் தொற்றிக் கொள்ளும். நீங்கள் ஒவ்வொரு முறை பொய் சொல்லும் போதெல்லாம், உங்களுடைய நாவை சாத்தானுக்குக் கொடுத்து, அவனை இன்னொரு பிள்ளைக்குத் தகப்பனாக்குகிறீர்கள்.

வேதத்தில், கடைசி பாவத்தைக் குறித்து வெளிப்படுத்தல் 22:15 -ல் சொல்லப்படுகின்றது. கடைசி நாளில், தேவனுடைய நகரத்திற்கு வெளியில் இருக்கப் போகிறவர்கள் யார் என்பதைக் குறித்து அங்கு சொல்லப்பட்டுள்ளது. “பொய்யை விரும்பி, அதன்படி செய்கிற யாவரும் புறம்பே இருப்பார்கள்.” பொய்தான் வேதத்தில் முதலாவது பாவமாகவும், கடைசிப் பாவமாகவும் சொல்லப்பட்டிருப்பதை நீங்கள் என்றாவது கவனித்ததுண்டா? பொய் சொல்வது மிக சீரியஸான ஒன்றாகும். தேவனிடத்தில் பொய் சொல்வதற்கும், ஜனங்களிடத்தில் பொய் சொல்வதற்கும் மற்ற எல்லாப் பொய்களுக்கும் தகப்பனாய் இருப்பது சாத்தான்தான். பேதுரு அனனியாவைப் பார்த்து, “பரிசுத்த ஆவியினிடத்தில் ஏன் பொய் சொன்னாய்?” என்று கேட்டார். பொய்தான் ஆதிசபையிலே முதன்முதலாக நியாயந்தீர்க்கப்பட்ட பாவமாகும். அது வெகு சீரியஸான விஷயமாகும். ஆகவே, பொய் சொல்வதை நிறுத்திவிட வேண்டும் என்று நம்முடைய குழந்தைகளுக்குக் கற்றுத்தருவது, பெற்றோர்களாகிய நாம் நம் குழந்தைகளுக்குக் கற்றுத்தர வேண்டிய மிக முக்கியமான பாடங்களுள் ஒன்றாகும். நம்முடைய பிள்ளைகள் நமது சுபாவத்துடன்தான் பிறந்திருக்கிறார்கள். அவர்கள் பிறந்ததிலிருந்தே பொய் சொல்கிறார்கள். அது எவ்வளவு சீரியஸானது என்று காட்டப்படாத பட்சத்தில், அவர்கள் அதை நம்முடைய வாழ்க்கையில் காணாத பட்சத்தில், அவர்களால் அதைக் கற்றுக் கொள்ள முடியாது. பெற்றோர்களாகிய நாம் உண்மை பேசுவதை எவ்வளவு சீரியஸாக எடுத்திருக்கிறோம் என்றும், நாம் ஏதாவது ஒன்றைச் சொன்னால், அதைச் செய்துவிடுவோம் என்றும் அவர்கள் காண வேண்டும். நம்முடைய பிள்ளைகளிடத்தில் ஏதேனும் வாக்குப் பண்ணினால், அதை நிறைவேற்ற வேண்டும். இல்லையேல், அதைச் செய்ய முடியாமற் போனதற்கான நியாயமான காரணத்தை விளக்கிச் சொல்ல வேண்டும்.

உண்மை பேசுதல் ஒரு குணம், நற்பண்பு. இந்த நற்பண்பை நாம் பெற்றுக் கொள்ள விரும்பினால், அதற்காக முழு இருதயத்துடன் போராட வேண்டும். பரிசுத்த ஆவியானவர், சத்திய ஆவியாவார். நீங்கள் சத்தியமுள்ளவர்களாயிருக்க விரும்பினால், பரிசுத்த ஆவியானவர் உங்களை நிரப்ப வேண்டுமென கேட்க வேண்டும். பொய் பேசும் பழக்கத்தை முற்றிலுமாய் அழித்துவிட வேண்டுமாய் அவரிடத்தில் நீங்கள் கேட்க வேண்டும். அதை நாம் செய்வோமானால், சாத்தான் நம்மை வஞ்சிப்பதற்காகப் பயன்படுத்தும் பொய்களை நாம் கண்டுகொள்ளத்தக்கதான பகுத்தறிவை தேவன் நமக்கு தந்தருளுவார்.

*சகோதரன் சகாரியா பூணன்*




கேள்வி: சபை எடுத்துக்கொள்ளப்படுதல் என்றால் என்ன?

பதில்: " ராப்சர்" என்ற வார்த்தை வேதாகமத்தில் இல்லை. அது இலத்தீன் வார்த்தையிலிருந்து வருகின்றது. அதனுடைய அர்த்தம் " தூக்கிச்செல்லுதல், போக்குவரத்து அல்லது பிடுங்கிச் செல்வது||, இந்தக் கருத்து வேதவாக்கியங்களில் தெளிவாக கற்பிக்கப்பட்டுள்ளது.

சபை எடுத்துக்கொள்ளப்படுதல் என்ற சம்பவத்தில் தேவன் பூமியிலிருக்கும் எல்லா விசுவாசிகளையும் எடுத்துக்கொண்டு அவருடைய நீதியான நியாயத்தீர்ப்பு உபத்திரவக் காலத்தின் போது பூமியின் மேல் ஊற்றப்பட வழிவகுக்கிறார். எடுத்துக் கொள்ளப்படுதல் என்பதை 1 தெசலோனிக்கியர் 4:13-18 மற்றும் 1கொரிந்தியர் 15:50-54 ஆகிய வசனங்கள் விளக்குகின்றது. தேவன் மரித்த எல்லா விசுவாசிகளையும் உயிர்பித்து, அவர்களுக்கு மகிமையான சரீரத்தைக் கொடுத்து பூமியிலிருந்து எடுப்பார், எல்லா உயிரோடிருக்கும் விசுவாசிகளும் மகிமையின் சரீரம் கொடுக்கப்பட்டு மற்ற எல்லா விசுவாசிகளோடு எடுத்துக் கொள்ளப்படுவார்கள்.

"ஏனெனில், கர்த்தர் தாமே ஆரவாரத்தோடும், பிரதான தூதனுடைய சத்தத்தோடும், தேவ எக்காளத்தோடும் வானத்திலிருந்து இறங்கி வருவார், அப்பொழுது கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் முதலாவது எழுந்திருப்பார்கள். பின்பு, உயிரோடிருக்கும் நாமும் கர்த்தருக்கு எதிர்கொண்டுபோக மேகங்கள்மேல் அவர்களோடகூட ஆகாயத்தில் எடுத்துக்கொள்ளப்பட்டு, இவ்விதமாய் எப்பொழுதும் கர்த்தருடனே கூட இருப்போம்" (1 தெசலோனிக்கியர் 4:16,17).

எடுத்துக்கொள்ளப்படுதலில் நம்முடைய சரீரங்கள் ஒரு சடுதியான மறுரூபமாக்கப்பட்டு நித்தியத்திற்கு ஏற்றதாகும். "அவர் வெளிப்படும்போது அவர் இருக்கிறவண்ணமாகவே நாம் அவரை தரிசிப்பதினால், அவருக்கு ஒப்பாயிருப்போமென்று அறிந்திருக்கிறோம்"(1யோவான் 3:2). இரகசிய வருகை இரண்டாம் வருகையிலிருந்து வேறுபட்டது. இரகசிய வருகையின்போது "தேவன் மேகங்களில்" வந்து நம்மை "ஆகாயத்தில்" நம்மை சந்திப்பார்.

(1 தெசலோனிக்கியர் 4:17) இரண்டாம் வருகையின் போது தேவன் பூமிக்கு இறங்கி ஒலிவ மலையின் மேல் நிற்பார், ஒரு பெரிய பூமியதிர்ச்சி உண்டாகும், தேவனுடைய எதிரிகள் முறியடிக்கப்படுவார்கள் (சகரியா 14:3-4).

இரகசிய வருகையின் உபதேசம் பழைய ஏற்பாட்டில் கற்பிக்கப்படவில்லை. அதனால்தான் பவுல் இதை 'இரகசியம்' இப்போது வெளிப்படுத்தப்பட்டது என்று கூறுகிறார். "இதோ ஒரு இரகசியத்தை உங்களுக்கு அறிவிக்கிறேன். நாமெல்லாரும் நித்திரையடைவதிலலை, ஆகிலும் கடைசி எக்காளம் தொனிக்கும்போது, ஒரு நிமி~ த்திலே, ஒரு இடைப்பொழுதிலே, நாமெல்லாரும் மறுரூபமாக்கப்படுவோம். ஏக்காளம் தொனிக்கும், அப்போழுது மரித்தோர் அழிவல்லாதவர்களாய் எழுந்திருப்பார்கள், நாமும் மறுரூபமாக்கப்படுவோம். எக்; காளம் தொனிக்கும், அப்பொழுது மரித்தோர் அழிவில்லாதவர்களாய் எழுந்திருப்பார்கள், நாமும் மறுரூபமாக்கப்படுவோம்" (1 கொரிந்தியர் 15:51-52).

இரகசிய வருகை என்பது ஒரு மகிமையான சம்பவம், அதற்கு நாம் ஆசையாயிருக்க வேண்டும். நாம் முடிவில் பாவத்திலிருந்து விடுதலையாவோம். நாம் என்றென்றைக்கும் தேவனுடைய பிரசன்னதிலிருப்போம். இரகசிய வருகையின் அர்த்தம் மற்றும் அதன் உண்மைத்தன்மைக் குறித்து அதிகமான விவாதங்கள் உள்ளன. இது தேவனுடைய எண்ணம் அல்ல. ஆனால் எடுத்துக் கொள்ளப்படுதல் என்பது ஒரு ஆறுதல் தருகிற உபதேசமாயும், நம்பிக்கைத் தருகிறதுமாயிருக்கிறது, நாம் " ஒருவரையொருவர் உற்சாகப் படுத்திக்கொள்ள வேண்டும்" என்று தேவன் விரும்புகிறார். (1 தெலோனிக்கியர் 4:18).



# God's Five Purposes for Your Marriage

By Brandon Cox

Angie and I are approaching our 17th wedding anniversary. I'd love to say that we've always been happily married, but that kind of dishonesty wouldn't help you much. Happiness rises and falls, for all of us, married or not. And happiness isn't the real goal of life anyway. Every day, I pray a prayer over my children that says, "God, help them to first be holy (set apart for You), and then to be healthy (physically, emotionally, spiritually, and socially), and finally to be happy." I want all three for them, but I want them in the proper order. So hoping to be married "happily ever after" will leave most people frustrated by unfulfilled expectations.

When Angie and I are mutually committed to being God's people for each other, our marriage soars. Right now, I feel that we're stronger and more blessed than ever. But that's partly because we've been in the fight of our lives, recovering from the discovery of some very deep, real sin and pain in each of us. Selfishness always destroys because it's rooted in pride, works in the opposite manner of love, and can never be satisfied. But when we exemplify the very nature of the gospel (the self-sacrificing love by which Jesus went to the cross and laid Himself down for us to have and to hold us forever), then healing comes. And along with it, joy and happiness and fulfillment and intimacy and oneness and all the other things we know marriage ought to bring.

I'm a big believer that God is a God of purpose and He has five purposes for every one of us. These are elaborated upon in ' Pastor Rick WarrensThe Purpose Driven Life, which has helped to lead a generation to an understanding that it isn't about me, or you. It's about God. It's about His plans and desires. And those five purposes are:

- He has planned us for His pleasure and wants everything about our lives to be worship.
- He has formed us for fellowship and desires that we develop deep relationships within His family.

young adult pages

- He has created us to be like Christ and gives us every spiritual resource necessary to pursue that goal.
- He has shaped us to serve Him and we serve Him by serving others.
- He has made us for a mission and wants to use us to share the good news with everyone in the world.

God has these five purposes for your life as an individual believer. He also communicates these five purposes to the church, and every local church that focuses its work and ministry on fulfilling these five purposes in the world will be healthier for it. And as I've devoted plenty of thought to it, these five purposes wonderfully express God's design for marriage too.

God planned our marriage for His pleasure. That is, the primary goal of the oneness that my wife and I develop is ultimately designed to reflect His glory to the world as we worship. This is why we grow when we pray together, sing together, attend worship services together, read or study together, and talk about spiritual things together. Our marriage is not simply a relationship in which we get to pursue our personal agendas of feeling good. Our marriage is an opportunity to glorify God and show the world what He's all about.

God formed our marriage for fellowship, with each other and with Himself. I say at weddings that a strong marriage is really a marriage of three, not two, because God is always the invisible third member. That sounds pretty, but we forget it about six minutes after the bridal kiss. But it's true. God wants spouses to be one, which means to intimately know and to intimately be known by each other. That's why secrets destroy marriages – not just the scandalous secret sins but the secrets of our hearts – our pain, our temptations, our inadequacies.

Few things are more important to a thriving marriage than honest, open, real, raw, heart-exposing conversation. And He desires for us, as a couple, to know Him intimately. And intimacy is either nurtured by intentional pursuit, or it is stagnating, but it's never neutral. Intimacy happens as we make time to be with each other, to talk to each other, to show physical affection and to enjoy physical intimacy with each other. God wants us closer to each other and closer to Himself.

God created our marriage to make us more Christlike. I am, by nature, a selfish dude. My wife has made an enormous dent in my selfishness. She challenges me to be God's man, to be more like Jesus, to root out sin, to keep praying, to stay in the Word, and to love Jesus fully. And my responsibility is to present her to Jesus someday more mature, more Christlike. That doesn't happen by controlling or bullying or dominating. It also doesn't happen accidentally or unintentionally. God's purpose for marriage is that we each look more like Jesus because of each other.

God shaped our marriage to serve Him by serving others. One of the most difficult seasons of our marriage hit us when we moved from serving together to doing life a bit separately. Church was great. The weather was awesome. The opportunities to be adventurous and to experience a new place were wonderful. And the friends we made are lifetimers, especially within our small group. But, we made a painful transition.

For thirteen years, we had been the Pastor and Pastor's wife who put on Vacation Bible Schools, hosted families in our home, and sat together at potlucks. We were always in the trenches together doing ministry alongside each other. Suddenly, I left early for the office to carry on my pastoral ministry while Angie served in ministry at home – homeschooling and changing lots of diapers.

Neither is more or less ministry, but we were doing ministry separately and differently than we had experienced. Since planting Grace Hills, we've relished the opportunities to get back to serving people beside each other while also valuing our uniquely individual ministries as well. Few things will bring you closer as a couple than doing something together to serve other people.

God made our marriage for a mission. Our marriage, itself, should show the world what it meant for Jesus to love the church like a bride, to lay down His own life for her ("church" comes from a feminine Greek word), and to redeem and wash and cleanse her for Himself. So our love should be such that people see us and are taught something about God's love. And we should show each other the kind of grace that teaches people how God forgives. And we should see our marriage as an opportunity to witness to the world about Jesus together. That means opening our home to the hurting, counseling couples and individuals together, and living on mission together.

I fell in love with Angie in high school. I wanted to be around her all the time. I couldn't wait to marry her. I loved starting a life with her and I wouldn't trade any of those earliest memories together for anything in the world. I get the warm fuzzies thinking about it. But while I wouldn't trade that experience for anything, I also don't want to go back.

I'm loving "the now" with Angie. I'm grateful for all that we've discovered and are still discovering about what it means to be married, to glorify God together, to find community and oneness in each other, to serve others and share Jesus together. And with all of the painful discoveries and difficult conversations we've had, I've never felt more blessed and gifted with a girl who makes my heart melt.

I'm thankful for the virtuous woman God has given to me to be my wife. Her price is far above rubies. And I'm even more thankful that He has clarified His purposes for our marriage, and now, I look forward to each new day of seeing those purposes fulfilled in us.

Thanks: Pastorscommunity.com

# உடல் கொழுப்பு கரைய




தேவையான பொருள்கள்:
முட்டைகோஸ் – கால் கிலோ
மிளகு – அரை டீஸ்பூன்
சீரகம்- அரை டீஸ்பூன்
இஞ்சி,பூண்டு விழுது – ஒரு டீஸ்பூன்
எண்ணெய் – ஒரு டீஸ்பூன்
உப்பு – தேவையான அளவு
கொத்தமல்லி தழை – சிறிதளவு
மிளகு தூள் – அரை டீஸ்பூன்
செய்முறை:

முதலில் முட்டைகோஸை நன்கு கழுவி சிறியதாக நறுக்கிக் கொள்ள வேண்டும். பின் கடாயில் எண்ணெய் எடுத்துக்கொண்டு அதில் மிளகு, சீரகம் ஆகியவற்றை போட்டு தாளிக்க வேண்டும். தாளித்ததும் இஞ்சி, பூண்டு விழுது மற்றும் உப்பு ஆகியவற்றை சேர்த்து நன்கு வதக்க வேண்டும். நன்கு வதங்கிய பின்பு நறுக்கிய முட்டைகோஸ் சேர்த்து வதக்க வேண்டும். அதன்பின் ஒரு கப் தண்ணீர் சேர்த்து கால் மணி நேரம் கொதிக்க வைக்க வேண்டும். நன்கு கொதித்ததும் அதனை வடிகட்டி மிளகுத்தூள், கொத்தமல்லி தழை ஆகியவற்றை சேர்த்து குடிக்க வேண்டும்.
மருத்துவக்குணங்கள்:

முட்டைகோஸை ஜூஸ் போட்டு குடித்தால் அல்சர் குணமாகும்.
உடல் எடையை குறைக்க வேண்டுமெனில் வேக வைத்த முட்டைகோஸ் அல்லது முட்டைகோஸ் சூப் சாப்பிட வேண்டும். முட்டைகோஸில் நார்ச்சத்து அதிகமாக உள்ளதால் இவை செரிமான மண்டலத்தை சீராக இயக்கி மலச்சிக்கல் பிரச்சனையை குணமாக்கும். மேலும் உடலை தாக்கும் புற்றுநோய், இதயநோய் ஆகியவற்றை குணப்படுத்தும்.
குறிப்பு:
காலையில் தினமும் வெறும் வயிற்றில் பருகினால் உடல் கொழுப்பு கரையும்.





# 7 Reasons So Many Young Churches Fizzle Out

The past four decades of working with churches, as well as overseeing a network of churches, have taught me several lessons related to their success and failure. In this article, I will try to pinpoint several salient issues related to church plants that can make or break them. I also speak in the context as someone who has planted and overseen a local congregation since 1984.

In reading Scripture, I am convinced that the devil cannot close a local church, movement or denomination. Jesus said in Matthew 16 that the gates of hell cannot prevail against the church, and Jesus also said in the book of Revelation (2:5) that He would remove the candlestick if it did not repent. Candlesticks stood for the church, according to Revelation 1:20.

I have given a lot of thought to the following points, since I have given my life to serve His body and believe the local church is God's Plan A to fulfill His divine purpose for the earth. Since I live in and serve out of New York City, I will use this city as my primary reference because this is the laboratory I am familiar with.

The following are some main reasons why I believe many church plants fail:

**1. The lead pastor has never heard from God to launch a church.**

I am old-fashioned and believe that the first and foremost question a prospective pioneering pastor has to ask is "Did God really assigns me to start a church?" This is in accordance with the biblical model, in which Jesus personally called His 12 to be fishers of men (Mark 1:17; 3:13-15). I have found that leading a local church is so difficult that, unless you are convinced God has called you to serve as a pastor, you will not be able to

endure the great challenges you will face. If someone launches a church merely because they think it is a good thing to do, or because they need a way of making a living, they will quit once the fiery trials come their way.

**2. The lead pastor and family are not acclimated to the culture of the city.**

Many gifted church planters have walked away from their churches because either they or their family could not adjust to the challenges of living in a complex metro area like NYC.

My suggestion is, before you launch a church in a new city, live in that city for several years as a secondary leader who serves a congregation in that same region, making sure you know what you and your family are getting into.

**3. The cost of living is high.**

Most church plants will have a difficult time sustaining themselves for more than a few years if they do not have an adequate financial pipeline from a mother church and/or a denomination. The cost of living is way too high in a city like New York, as compared to most other places in the world, so everyone must adequately plan and count the cost before they launch a church here.

My wife and I launched a church in NYC in the 1980s with no money, no church planting team, in a very rough, at-risk community replete with drug-related violent crime and witchcraft. However, we lasted, going on five decades, because we were sent by the word of the Lord as confirmed by our pastor and mother church.

**4. The leaders are not rooted in the gospel.**

Some church plants have a lead pastor and core team with such theological divergence that, eventually, they find they cannot continue to walk together (Amos 3:3). The rigors of doing life together in the context of a church will smoke out all character flaws and core doctrinal beliefs.

**5. They do not have their own facility.**

Most new congregations will not have the money to purchase their own facility. This is why so many will start off renting a public school, since the

price is reasonable; however, they are at the mercy of the mayor who can change policy and attempt to evict them. When you do not own your own facility, you are also at the mercy of a landlord who can raise the rent and/or throw you out if the community complains about you. Because of this, some pastors in Manhattan think they have to toe the line very carefully when it comes to preaching controversial social issues because they may risk getting evicted.

Congregations without the luxury of using a public school usually have to pay exorbitant rents, often having to move frequently from facility to facility, which makes it harder to grow a church with stability and consistency.

**6. They build upon talent, not committed disciples.**

Often new churches are so desperate for ministry volunteers they will place people in positions of leadership, including the worship team, who are not committed, mature disciples. This eventually causes frustration to the lead pastor because these immature people act out of their ego or become unreliable when the thrill of the new plant is gone or they do not have their way.

**7. Their core team doesn't have a common DNA.**

Another issue I see besides theological divergence is that the church planting teams should have a history together prior to the plant to ensure they all have a common DNA when it comes to their values, methodologies, style of leadership and mission. Teams that are put together too fast or without prior relational capitol have a greater risk of failure due to division and lack of unity.

**Church attendance is as vital to a disciple as a transfusion of rich, healthy blood to a sick man. – Dwight L. Moody**

# நற்குலத் திராட்சைசெடி நீங்களே!

## சகோதரி ஜெயானி இலங்கேஷ்வரன்



தேவனுடைய தோட்டத்தில் நற்குல திராட்சைச் செடியாய் நடப்பட்ட என் அன்புச் சகோதரி மார்களுக்கு அன்பின் வணக்கங்கள். உங்கள் மேல் தேவன் வைத்த தயவும் நம்பிக்கையும் அதிகம். உங்களிட த்தில் அவர் பெரிய பொறுப்பை தந்திருக்கின்றார். மாதராய் நாம் பிறப்பதற்கே நாம் மாத வம் செய்திட வேண்டுமம்மா என்று பாடுகின்றார் சுப்பிரமணிய பாரதி. மேலைத்தேச நாடுகளில் காணப்படும் குடும்ப அமை ப்பு முறைகள் நம்மைச் சிலவேளைகளில் முகம் சுளி க்கப் பண்ணுகின்றது . தாயானவள் தன் கடமையை சரிவரச் செய்யா விடத்து அந்தக் குடும்பம் உடைந்தோ அல்லது உருவழிந்தோ போவதைப் பார்க்கின்றோம். ஆனால் நமக்கோ தேவன் ஒரு மகா பெரிய பொறுப்பைத் தந்திருக்கின்றார். நாம் நாடுவிட்டு இன னொரு நாடு புகுந்து வாழும் போது இன்னும் அந்தப் பொறுப்பு அதிமாகி விடுகின்றது.

இந்தப் பொல்லாத உலகம் நம் பிள்ளைகளைத் தின்று விழுங்கத் தன் வாயைத் திறந்து வைத்துக் கொண்டிருக்கின்றது. உயர்கல்விச் சாலைக ளினதும், பல்கலைக்கழக வாசல்களிலும் காத்து நிற்கும் போதை வஸ்து க்களை விற்கும் முகவர்களே இதற்கு சாட்சி. அது மட்டுமன்றி, நம்முடைய வாலிப மக்கள் பாலியல் வாழ்வில் தங்கள் பரிசுத்தத்தை இழக்கின்றார்கள். எங்கள் பெண்பிள் ளைகளின் கற்பில் கறைபடிய வைக்க சத்துரு எல்லா நாடகத்தையும் ஆடகின் றான். ஆனாலும் நாம் மௌனமாய் ஏதுவும் செய்யாமல் இருக்கின்றோம். நம் மால் என்ன செய்யமுடியும் என்ற சுயநலமான ஒரு சாட்டும் நிழலாய் தொடர்ந்து வருகின்றது. நம்முடைய பிள்ளைகளைச் சத்துரு தொடாமல், தொடராமல் இரு க்க நாம் என்ன செய்ய வேண்டும்? என்பதைப் பார்க்கலாம்.

1. ஜெபமே நாம் நம்பிள்ளைகளைச் சுற்றிப்போடும் வேலி.

பரிசுத்த வேதாகமத்தில் யோபு என்னும் ஒரு மனிதனைப் பார்க்கின்றோம். அவன் தேவனால் பாராட்டப்பட்டவன். அவனுக்கு மொத்தமாக 10 பிள்ளைகள் இருந்தார்கள். இவர்கள் ஒருவரில் ஒருவர் நேசமுள்ளவர்களாயிருந்தபடியால் தங்களுக்குள் விருந்து செய்வார்கள். அன்பான குடும்பம், ஒற்றுமையான குடும் பம். இதனைக் கெடுக்கவே பிசாசு என்னும் எதிரியானவன் முழுமூச்சோடு செய லாற்றினான். அவனால் இந்த நீதிமானுடைய பிள்ளைகளை ஒன்று செய்ய முடிய வில்லை. அவர்களைத் தொட முடியவில்லை, நெருங்க முடியவில்லை. அவன்

தேவனிடத்தில் இவ்வாறு சொன்னான், நீர் அவனையும் அவன் வீட்டையும் அவனுக்கு உண்டான எல்லாவற்றையும் சுற்றி வேலியடைக்கவில்லையோ? அவன் கைகளின் கிரியையை ஆசீர்வதித்தீர், அவனுடைய சம்பத்து தேசத்தில் பெருகிற்று (யோபு 1:10). தேவன் நமது கண்ணுக்குத் தெரியாத ஒருவேலியை அடைத்திருந்தார். காரணம் என்ன தெரியுமா? யோபு தன் பிள்ளைகள் ஏதாவது தவறு செய்திருப்பார்களோ என்று பயந்து தேவனுக்கு பலியிட்டான், மன்னிப்புக் கேட்டிருந்தான். ஆகையினால் தேவன் அவனுக்குண்டான எல்லாவற்றையும் சுற்றியொரு வேலியடைத்திருந்தார்.

அன்புச் சகோதரிகளே, நாம் செய்யும் ஜெபம் தான் நம்முடைய பிள்ளைகளைச் சுற்றிலும் வேலியடைக்கும். நம்முடைய பிள்ளைகளை சத்துருவின் கையில் இருந்து காப்பாற்றித் தரும். ஆகையால் ஊக்கமாகவும், வாக்குத்தத்தங்களைச் சொல்லியும் ஒவ்வொரு நாளும் ஜெபியுங்கள். எந்தச் சோதனை வந்தாலும் ஊக்கமாகவும் திடமாகவும் ஜெபியுங்கள். ஜெயம் உங்களுடையதே!

2. பிள்ளைகளோடு உரையாடுதலே நீங்கள் போடும் வேலி.



நீங்கள் உங்கள் மக்களோடு செலவிடும் ஒவ்வொரு வினாடியும் பரலோகத்தில் சந்தோஷமும், பாதாளத்தில் நடுக்கமும் உண்டாகின்றது. உங்கள் பிள்ளைக ளோடு மனம் விட்டு உரையாடுவீர்களானால் அவர்களின் மன அழுத்தங்களையும், கேள்விகளுக்கும் நம்மால் பதில் கொடுத்து அவர்களை நல்வழிக்கு நேராய் நடத்த முடியும். *யாத்-12:26* அப்பொழுது உங்கள் பிள்ளைகள்: இந்த ஆராதனையின் கருத்து என்ன என்று உங்களைக் கேட்டால், என்று வேதம் சம்பாஷனையை ஊக்குவிக்கின்றது. நாம் எப்படி வாழவேண்டும், ஜெபிக்க வேண்டும், எப்படி வாழவேண்டும் என்ற அறிவுரையை கொண்டு செல்வது நம்முடைய சம்பாஷனையே. குடும்ப உணவு சமயத்திலும், வெளியே போகும் சமயத்திலும் தேவனைப் பற்றிய சம்பாஷனை தொடருமானால், அவர்கள் உள்ளத்தில் தேவனைப்பற்றிய விசுவாச விளக்கத்தையும், நம்பிக்கையையும் வளர்த்து விடும். ஆபத்து நேரத்திலும், துன்ப நேரத்திலும் இந்த உரையாடல் அவர்களைத் தூக்கி நிறுத்தி, நிலைவரப்படுத்தி விடுகின்றது. நீ அவைகளை உன் பிள்ளைகளுக்குக் கருத்தாய்ப் போதித்து, நீ உன் வீட்டில் உட்கார்ந்திருக்கிறபோதும், வழியில் நடக்கிறபோதும், படுத்துக்கொள்ளுகிறபோதும், எழுந்திருக்கிறபோதும் அவைகளைக்குறித்துப் பேசி ( உபா-6:7) என்பதே வேதம் நமக்கு உரையாடலை ஊக்குவிக்கும் கட்டளை. ஆகையால் உரையாடுங்கள், பேசுங்கள், சம்பாஷியுங்கள், அப்பொழுது நம்மக்களை சத்துருவின் கையில் இருந்து காப்பாற்றிக் கொள்ளலாம். நாம் திறந்த மனதோடும், பொறுமையோடும் நம்

பிள்ளைகளோடு உரையாடும் ஒவ்வொரு உரையாடலும் உங்கள் பிள்ளைகளையும், அவர்களின் பழக்க வழக்கஙங்களையும் காத்துக் கொள்ளும்.

3. அன்பும் பொறுமையுமே நீங்கள் போடும் வேலி.



நம்முடைய பிள்ளைகளுக்கு நாம் பொருளாதார ஆதாரங்களைக் கொடுக்க முயற்சிக்கிறோமே தவிர அவர்களுக்கு பொறுப்பை கற்றுக் கொடுக்க மறந்து விடுகின்றோம். நம்முடைய தாய்மார்கள் சிறிய வயதிலேயே நமக்கு கற்றுக் கொடுத் தின் விளைவே நாம் தற்போது அமைத்திருக்கும் குடும்பம். ஆனால் நம்முடைய பிள்ளைகளுக்கு பொறுப்பையும், வேலைப் பகிர்த்லையும் ஆரம்ப வயதில் கற்றுக் கொடுக்காவிட்டால் எதிர்காலத்தில் ஏற்படும் வாழ்வியல் போராட்டத்தில் அவர்களால் நீந்திக் கரைசேர முடியாது போய்விடும். ஆகவே ஆண்பிள்ளைகளாயினும், பெண் பிள்ளைகளையாயினும் அவர்களுக்கு பாத்திரங்களைக் கழுவு வைக்க பொறுப்புக் கொடுப்பதில் இருந்து பொறுப்புக்களை பகிர்ந்து கொள்ளும் இடம் வரைக்கும் பயிற்றுவிக்க வேண்டியது நம்முடைய கடமை, நம்முடைய முதல் வேலையும் கூட.

*சான்றவர் சான்றான்மை குன்றின் இருநிலத்தான்*
*தாங்காது மன்னோ பொறை*

என்பது தமிழ் வள்ளுவனின் வாக்கு. இதன் அர்த்தம் என்ன தெரியுமா?. சான்றோரின் சால்பு நிறைந்த பண்பு குறைபடுமானால் இந்தப் பெரிய நிலவுலகமும் தன் பாரத்தைத தாங்க முடியாமற் போய் விடும். ஆகையால் நம்முடைய மக்களை சான்றோரர்களாக்குவது மாத்திரமன்றி ஆன்றோனாக்குவதும் நம்முடையதே. பெற்றோருக்குச் செய்ய வேண்டிய கடமை (மத் 15:5), நாட்டுக்குச் செய்ய வேண்டிய கடமை (ரோமர் 13:7), குடும்பத்துக்கும், உறவுகளுக்கும் செய்ய வேண்டிய கடமை என்று (1கொரி 7:3)என்று நாம் ஊட்டிப் பயிற்றுவித்து வளர்ப்போமானால் எதிர்காலத்தில் நம்முடைய மக்கள் தேவனுக்குச் சாட்சியாகவும், குடும்பத்திற்கு விளக்காகவும் வாழ்வார்கள். கடமை உணர்வில் வாழும் ஒவ்வொரு மகனும், மகளும் அவரவர் பெற்றோரின் ஆசீர்வாத ஊற்றுக்களே. இந்த ஊற்றுக்களை உருவாக்குவதோ, அல்லது அடைப்புகளாய் மாறுவதோ நம்முடைய கையில் தான் இருக்கின்றது. பொறுப்புக்களை பிள்ளைகளிடத்தே பகிர்ந்து கொடுத்து, கீழ்ப்படிதல், மரியாதை கொடுத்தல், கனப்படுத்லைக் கற்றுக் கொடுத்து உங்கள் பிள்ளைகளை காத்துக் கொள்ளுங்கள். இதுவே நீங்கள் போடும் வேலி. உங்களை அர்ப்பணித்து, தேவனுக்காகவே வாழுங்கள், தீர்மானியுங்கள்.

தேவன் உங்களை ஆசீர்வதிப்பாராக!

# THE DONKEY AND THE WOLF

One fine day a donkey was happily grazing on the hills that he did not notice when a wolf had crept up near him. As he lifted up his head to take a break from eating, he saw the wolf that was waiting to attack and eat him.

The donkey knew he would have to think fast if he wanted to save himself. He started crying loudly as if he was badly hurt. The wolf didn't understand what could have suddenly happened to the donkey, so he asked the donkey what the matter was.

“A thorn has pierced my foot, will you help me take it out?” he asked the wolf.

“Why will I do that?” replied the wolf.

“Well, I am requesting it for your benefit. The thorn stuck on my foot is very sharp, so that when you eat me, it will get stuck in your throat and it will not come out. You will have to suffer through immense pain because of the thorn.”, said the donkey. “But if you remove the thorn first and eat me second, everything will be alright”, he added.

The wolf got worried for this throat and thanked the donkey. The wolf approached the donkey to take off the thorn from the donkey's foot. As he went near the donkey to take out the thorn, the donkey kicked him with all his might and ran away from there as quickly as possible.

The wolf was astounded and did not realize what had happened. He realized that he had lost a few of his teeth. The wolf cursed himself for his foolishness and limped away .

***Moral:*** Always use your presence of mind to take care of difficult situations and do not listen to others without first using your brain.



FROM PRAISE TABERNACLE



# SPARK

## Praise Tabernacle

5155, Spectrum way, Unit 7
Mississauga ON L4W 5A1

Sunday @
9:15 AM- Worship in English
9:30 AM- Sunday school
10:30 AM- Worship in English and Tamil
11:15 AM- Gateway youth
6:00 PM - Worship in Tamil

Wednesday @ 10:30 AM - Intercessory prayer
Thursday @ 7:30 PM - Bible study and prayer

**Monthly meetings:**
**1st day of the month 5:00 AM-Promise meeting**
**1st Saturday of the month- 9:30 AM- Fasting and Prayer.**
**2nd Saturday of the month-10:00AM - Women's meeting.**
**3rd Friday of the month-10:00PM- Friday night prayer.**

இலங்கையில் துதியின் கூடாரம்

1. 2ம்கட்டை, மடுறோட், மன்னார்
2. கறுக்காக்குளம், வட்டக்கண்டல்-மன்னார்
3. தம்பனைக்குளம், மடு-மன்னார்

தொடர்புகளுக்கு: போதகர்அன்பழகன்பிலிப்பு
தொலைபேசி: +19477617665 7

இந்த ராஜ்ஜியத்தின்சுவிசேசம் உலகமெங்கும் நற்செய்தியாக பிரசங்கிக்கப்படும்,அப்பொழுது முடிவு வரும்.........